வில்லை: வேதம் செய்கை மாண்டிலது - வேதமும் (அவ்வேதவிதிப்படி) செய்யுங் கருமமும் அழிந்ததில்லை', என்னும் தன்மை - என்கிற இத்தன்மைகள், வாய்மையான் - மெய்யாயிருத்தலை நோக்கி அதனால், உணர்தி - அறிவாயாக; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை.

இராவணன் பிராட்டியைக் கையால் தொட்டிருப்பானானால் அண்டமு கீண்டதாம், அனந்தனுச்சி கிழிந்ததாம், வேலைகள்யாவும் எழுந்து தலைமேல் வரும்; சுடர்கள்யாவும்விழுந்தனவாம, வேதமும் வைதிக கிரியையும் மாண்டனவாம் என்பதற்கு ஐயமில்லை: இவையெல்லாம் அங்ஙனம் ஆகாததனாலேயே பிராட்டியை இராவணன் தொட்டானில்லை யென்பதை ஐயந்திரிபற அறியலாம் என்று கருதது. அநந்தன் - பிரளயகாலத்திலும் அழிவில்லாமல் எப்பொழுதும் நித்தியனாயிருப்பவனென்று பொருள்படும் வடசொல்; ந அந்த என்று பிரியும். வேதம் மாணடிலது, செய்கை மாண்டிலது எனத் தனித்தனி இயைக்க. இனி, வேதம் செய்கை [ஒழுக்கம்] மாண்டிலது எனினுமாம். (கூகூ)

கூஎ. சோகத்தா ளாய நங்கை கற்பினாற் றொழுதற் கொத்த
மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றார் மற்றைப்
பாகத்தா ளிப்போ தீசன் மகுடத்தாள் பதுமத் தாளு
மாகத்தா ளல்லண் மாய னாயிர [1]மௌலி மேலாள்.

(இ - ள்.) சோகத்தாள் ஆய - (உன்னைப்பிரிந்ததனாலாகிய) துக்கத்தை யுடையவளான, நஙகை - பிராட்டியொருத்தி, கற்பினால - கற்புநிலைமை குன்றாதிருததலால்,—மாகத்தார தேவிமாரும - பெரிய வானத்தில் வசிப்பவர்களாகிய (இந்திரன் பிரமன் முதலிய) தேவர்களது மனைவிகளான இந்திராணி சரசுவதி முதலியோரும், இப்போது—, தொழுதற்கு ஒதத வான் சிறப்பு உற்றார-(அவரவர்) வணஙகுதற்கு எற்ற மிகக பெருமையை அடைந்தார்கள்; ஈசன் - பரமசிவனது, மற்றை பாகததாள - மற்றொருபாகமாகிய இடப்புறத்தி லுள்ளவளான உமாதேவி, மகுடததாள - (இப்பொழுது அப்பெருமானது) தலைமே லிருக்கததக்க சிறப்பையடைந்தாள்; பதுமததாளும் - செந்தாமரைமலரில் வசிபபவளான திருமகளும், மாயன ஆகததாள் அல்லள் - இனித் திருமாலின் திருமார்பில் வீற்றிருக்கத் தக்கவளல்லள், ஆயிரம் மௌலி மேலாள-(அப்பெருமானது) ஆயிரந்திருமுடிகளின்மேலும இருக்கத்தக்கவளானாள்; (எ - று.)

ஓரினத்தாரில் ஒருவரது நன்மைதீமைகளினால் அவ்வினத்தவர்க்கெல்லாம பெருமைசிறுமைகளுணடாதல், இயல்பு; அஙஙனம, மகளிருட் சீதாபிராட்டியின் கற்புநிலையினால இந்திராணி முதலிய மாதர்களனைவரும் சிறப்படைந்தன ரென்பார், 'நஙகைகற்பினால் தேவிமாரும வான் சிறப்புற்றா, பாகத்தாள், மகுடத்தாள், பதுமததாள, மௌலிமேலாள்' என்றார். 'ஈசன் மகுடததாளு,' 'மாயனாயிரமௌலிமேலாள்' என்பவற்றின் கருத்து - அவரவர் தலைமேற்கொண்டு கொண்டாடத் தகக சிறப்

பையுற்றன ரென்பது. 'நமைகைகற்பினல்' என்றதை எல்லா வாக்கியங் களிலுங் கூட்டுக; முதநிலைத்தீவகம். இங்கு 'மகுடம' என்பது - தானி யாகுபெயராய், சிரசை யுணாததிற்று. மாகம் - மஹாகம் என்னும் வட மொழியின விகாரம்; பெருவானம் என்று பொருள. அர்த்தநாரீசுவர மூர்த் தததிலே சிவபிரானது பாகம் வலப்புற மாதலால், இடப்புறம் 'மற்றைப் பாகம' எனப்பட்டது. 'ஆயிரமௌலி' என்றது - விராட்ஸவ ரூபததின் நிலைமையைக கருதி. பி - ம்:—[1]மௌலியாளால். (கஎ)

சுஅ இலங்கையை முழுது நாடி யிராவண னிருக்கை யெய் திப், பொலங்குழை யவரை யெலலாம் [1]பொதுவுற நோக்கிப் [2]போ ந்தே, னலஙகுதண சோலை புக்கே[1]னவ்வழி யணங்க னாளைக், கலஙகு தெண்டிரையிற் றாய கண்ணினீர்க் [3]கடலிற கண்டேன.

(இ - ள்.) (யான்), இலங்கையை முழுதும் நாடி - இலங்காபுரி முழுவ துந் தேடிப் பார்தது, இராவணன் இருககை எய்தி - இராவணனது இருப் பிடத்தை அடைநது, பொலம குழையவரை எல்லாம - (அஙகுஉள்ள) பொன்னலாகிய குழை யென்னுங காதணியை யுடையவாகளான மகளிரை யெல்லாம், பொதுஉற நோககி போநதேன் - பொதுவாகப் பார்ததுக் கொணடே சென்று, அலஙகு தண சோலை புக்கேன்-அசைகினற குளிர்ந்த அசோகவனத்திற பிரவேசிததேன்; அ வழி - அவ்விடததில், அணஙகு அனாளை-திருமகள்போன்றவளான சீதாதேவியை, கலஙகு தெள் திரையிற்று ஆய - அலைகின்ற தெளிந்த அலைகளையுடையதாகிய, கணணின் நீா கட லின் - கணணீராகிய கடலினலே, கணடேன்—; (எ - று.)

கறபிற்குறைபாடில ளென்பதை மூன்றுகவிகளா லுணர்ததியபின், தான் அப்பிராட்டியைக் கண்டமையை இனி உணாத்துகின்றனன் அநுமா னென்க. சீதை இராவணன் மாளிகையினுளளே யிருந்தில ளென்பது, முன்னிரண்டடியினற் போதரும்; அதனல், அவள் அவனுக்குச சிறிதும் வசப்பட்டிலளென்பதைப் பெறவைததாா. அவளைக் கணணினீர்க்கடலிற் கணடேன் எனறதனல், அவள் இராமவிரகத்தாற் சோகக்கடலில் ஆழ்ந் திருககுந் துன்பநிலையை விளக்கி, அவ்வகையால் அப்பிராட்டி கற்பிற் குறைபாடில ளென்பதைத் தான் அறிந்தமைக்குக் காரணத்தை விளக்கிய படியாம. இருக்கை - அரணமனை. அணஙகு அனள - (எமது) குலதெய் வம் போன்றவள் என்றுமாம். திரையிற்று - இன்சாரியையும 'று' விகுதி யும் பெற்றுவந்த ஒன்றன்பாற குறிப்புவினையாலணையும்பெயா. திரையின தாய எனப் பிரிதது - அலைகளோடு பரவிய எனறுமாம்; தாய—தாவிய, கட லின - கடலின் நடுவில் என்றுமாம். பி - ம்:—[1]பொதுவற. [2]போனேன். [3]கடலுட். (சுஅ)

சுகூ. அரக்கிய ரள[1]வற் றார்க [2]ளமரர்தங் குழுவு மஞ்சச்
[3]செருககினர் காப்ப நின்பா னேசமே யசசநீகக
விரககமென் றான்றுந் [4]தானே ரேநதிழை வடிவ மெய்தித்
[5]தருக்குயர் சிறையுற் றன்ன [6]தகைமைய டமிய ளம்மா.

(இ - ள்.) தமியள் - தனியளாகிய அப்பிராட்டி,—அரக்கியர் அளவு அற்றார்கள்-அளவில்லாத [மிகப் பல] ராக்ஷசிகள், அமராதம் குழுவும் அஞ்ச-தேவர்களின் கூட்டமும் அஞ்சும்படி, செருக்கினா - காவிததவாகளாய, காப்ப - காவல் செய்யாநிற்க,— நினபால் நேசமே - உன்னிடத்திலுள்ள அன்பே, அச்சம் நீக்க - தன்னுடைய அசசததைப்போகக, இரக்கம என்ற ஒன்று தான் - சிறந்த கருணை ரஸமென்கிற ஒரு குணமே, ஓர் ஏந்து இழை வடிவம் எயதி - தரித்த ஆபரணஙகளை யுடையாளொரு பெணணினுரு வத்தை யடைந்து, தருக்கு உயாசிறை உற்று அன்ன-கொடுமைமிக்க சிறைக காவலில் அகப்பட்டிருநதாற் போன்ற, தகைமையள் - தன்மையுடையவ ளாயிருக்கின்றாள்; (எ - று.)—அம்மா - ஈற்றசை; இரககககுறிப்புமாம.

குழுவும - உமமை, எதற்குமஞ்சாநெஞ்சுபடைத்ததன்மையை அறிவித தது. பி - ம்:—[1]அற்றாரும. [2]அலகையின். [3]செருக்கினல்கணடு செயயமெயக கனநீக்கசசீாதத. [4]தானே. [5]தருககிய. [6]தகையளாத, தன்மையள். (சுகூ)

௭௦. மாண்பிறந் தமைந்த கற்பின் வாணுத னின்பால் வைதத
சேண்[1]பிறந் தமைந்த காதல் [2]கண்களிற் றெவிட்டித்தீராக்
காண்[3]பிறந் தமையா னீயே கண்ணகன் ஞாலந் தன்னு
ளாண்பிறந் தமைந்த [4]செலவ [5]முண்டனை யாதி யன்றே.

(இ - ள்.) மாண பிறந்து அமைந்த - (நாணம் மடம் அசசம பயிர்ப்பு முதலிய) பெருமகுணஙகள் இயல்பிலே உணடாகிப் பொருந்தப் பெற்ற, கற்பின் - நிலைமையையுடைய, வாள்நுதல் - ஒளியுள்ள நெற்றியையுடைய வளான பிராட்டி, நின்பால் வைதத-உன்னிடம வைததுள்ள, சேண்பிறந்து அமைந்த காதல் - உயாவுளளதாயப்பொருந்திய விருப்பததை, கண்களின் - கண்களினால், தெவிட்டி தீரா - தெவிட்டிவிடாமல, காண - பார்த்தறகு, பிறந்தமையான் - (நீ) அவதரிததததனால்,—நீயே - நீ ஒருவனே, கண அகல ஞாலந்தன்னுள - இடமகன்ற நிலவுலகததில், ஆணபிறந்து அமைந்த செல் வம உணடனை ஆதி - ஆண்மகனாய்ப்பிறநது பொருந்தியதன் பயனாகிய பாக் கியத்தை அடைந்தவனாகினாய்; (எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற் றமுமாம்.

கற்புநிலைமையிற் கலஙகுதலில்லாத பிராட்டியினது பெருஙகாதலைக காணபெற்றதனால, நீயே புருஷோததமனாவை யெனபதாம். ["அபர மேயம்ஹி ததேதேஜஃ யஸ்யஸா ஜநகாதமஜா" எவனுக்கு அநத ஜநகரா ஜன் திருமகள் உரியளோ, அந்த ஒளி அளவிடமுடியாததன்றோ]" என்ற ஸ்ரீராமாயணமும, 'ஸ்ரீயஃ பதியே புருஷோததமனாவன்' என்று அதற் குப பெரியாாதாறபரியம அருளிசசெயதிருததல் இஙகுககருததகக கன. மாண் - மாணபு என்பதன் விகாரம். வாணுதல - அன்மொழித தொகை. காதல் காண என இயையும. காண - காண என்பதன் விகாரம; முதனிலைததொழிற பெயராககொணடு, நான்காம்வேற்று மைத்தொகை யென்னவுமாம. தெவிட்டித் தீாதல் - இவ்வளவுகணடது

போதுமென்று வெறுத்துவிடுதல். நீயே, ஏ - பிரிநிலை. மாண்பு இறந்து அமைந்த எனப்பிரித்து, மாட்சிமைக்குணங்கள் மிகவும் அமைந்த என்னவுமாம். இனி, இச்செய்யுளுக்கு - சிறப்பாக உடன்பிறந்தமைந்த கற்பையுடைய பிராட்டி தான் உன்பக்கல்வைத்துள்ள மேன்மை பொருந்திய காதல் தெவிட்டுதலால் [மிகநிறைதலால்] இடைவிடாது (பாவனையால்) நின்னைக் கண்களாற்காணுமாறு நீ பிறந்துள்ளதனால், நீயே உலகத்தில் ஆண்பாலாகப் பிறந்து அடையவேண்டிய செல்வத்தை யடைந்தனையாகின்றாய் என்று உரைகூறவும்படும். பி-ம்.—[1]பிறந்தனைய. [2]உகக்கனி ..தீரக். [3]பிறந்தமைந்த, பிறந்தமைய. [4]தன்மை. [5]கண்டிலை, உண்டிலை. (௭௦)

௭௧. அயிர்ப்பிலர் காண்பார் முன்னு மறிந்தில ரெனினு மைய
வெயிற்புனை யிலங்கை மூதூ ரிந்திரன் [1]யாக்கைக் கேற்ற
மயிற்புனை யியலி னாரு மைந்தரு நாளு[2]மாங்கே
யுயிர்ப்பொடு முயிரி னோடு மூச[3]லின் றாடு வாரும்.

(இ - ள்.) ஐய - சுவாமி!—எயில் புனை - மதில் சூழ்ந்த, இலங்கை - இலங்கையென்கிற, மூது ஊர் - பழவூராகிய, ஆங்கே - அவ்விடத்தில்,— நாளும் - நாள்தோறும், உயிர்ப்பொடும் - பெருமூச்சுடனேயும், உயிரினோடும் - குற்றுயிருடனேயும், ஊசல் நின்று ஆடுவாரும் - (வருவதும் போவதுமான) ஊஞ்சல்போல அலைந்துநிற்பவர்களாகிய, இந்திரன் யாக்கைக்கு ஏற்ற மயில் புனை இயலினாரும் - இந்திரனது உடம்பிற்குப் பொருந்திய மயிலையொத்த சாயலை யுடையவர்களான தெய்வமகளிரும், மைந்தரும் - தேவர்களும், முன்னும் அறிந்திலர் எனினும் - முன்னே (பிராட்டியை) அறியாதவர்களாயினும், அயிர்ப்பு இலர் காண்பார் - (அவளது கற்பின் நிலைமையைச்) சந்தேகமில்லாமற் கண்டறிவார்; (எ - று.)

'இந்திரன்யாக்கைக்கு ஏற்ற மயிற்புனையியலினார்' என்றது - இந்திரனது போகத்துக்குப்பொருந்திய மகளிர் என்றபடி; இனி, இதற்கு - இந்திரனது ஆயிரங்கண்களினாலும் பார்த்தற்குத் தக்க கட்டழகுடையவர் என்றுங் கருத்துக்கொள்ளலாம். உயிர்ப்பொடும் உயிரினோடும் ஊசல்நின்றாடுதல் - இராவணன் முதலிய இராக்கதர்களிழைக்கும் இடையூற்றின் மிகுதியாலென அறிக. இனி, இக்கவிக்கு - இலங்கைக்கு இந்திரனாகிய இராவணனது உடம்பைத் தழுவுதற்கு ஏற்ற அவன்மனைவிமாராகிய மகளிரும் மற்றைஇராக்கதரும் ஜாநகியை முன்னே அறியாதவர்களாயினும் (அவள்படும் விரகவேதனையை) ஐயமின்றிக் கண்கூடாகக்கண்டு (தாம் இரங்கி) நாடோறும் அவ்வூரிற் பெருமூச்சோடும் குற்றுயிரோடும் மனமலைந்து பரிதவிப்பரென்று பொருள்கூறுவாருமுளர். இனி, முதலடிக்கு, எனினும் - என்னைக்காட்டிலும், அயிர்ப்பிலர் காண்பார் - சந்தேகமின்றி அறிவார்; முன்னும் அறிந்திலர் - முற்காலத்திலும் இவளைப்போன்றவளைக் கண்டாரில்லை என்றும் உரைக்கலாம். பி - ம்:—[1]இயற்கைக்கு. [2]அங்கை. [3]நின்றுமுன்னே. (௭௧)

எஉ. தையலை வணங்கற் கொத்த [1]விடம்பெறுந் தன்மை நோக்கி
ஐயயா னிருந்த காலை யலங்கல்வே லிலங்கை வேந்த
னெய்தின னிரந்து கூறி யிறைஞ்சின [2]னிருந்து நங்கை
வெய்துரை சொல்லச் சீறிக் கோறன்மேற் கொண்டு விட்டான்.

(இ - ள்.) ஐய - சுவாமி,—நான்—, தையலை - பிராட்டியை, வணங்கற்கு - (எதிர்சென்று) வணங்குதற்கு, ஒத்த - தகுதியான, இடம் - சமயத்தை, பெறும் - பெறும்படியான, தன்மை - தன்மையை, நோக்கி - எதிர்பார்த்து, இருந்த காலை - (அவ்வசோகவனத்தில்) இருந்தபொழுது,—அலங்கல் - வெற்றிமாலையைச் சூடிய, வேல் - வேலாயுதத்தையுடைய, இலங்கை வேந்தன் - லங்காராஜனான ராவணன், எய்தினன் - அங்கு வந்து, இரந்து கூறி - (பிராட்டி தன்னைக்காமிக்கும்படி) பிரார்த்தித்து (ப்பலவார்த்தைகள் சொல்லி,) இறைஞ்சினன் இருந்து - (அவளை) வணங்கி நின்று, நங்கை வெய்து உரை சொல்ல - பிராட்டி கடுஞ்சொற்களைச் சொல்ல (க்கேட்டு), சீறி - கோபித்து, கோறல் மேற்கொண்டு விட்டான் - (அவளைக்) கொல்லத் தலைப்பட்டான்; (எ - று)—கீழ் 'கண்ணினீர்க்கடலிற்கண்டேன்' என்று பிராட்டியின் கற்புநிலையைத் தான் அனுமானித்து உணர்ந்ததைத் தெரிவித்த அனுமான், பிரதியட்ச பிரமாணத்தாலும் அப்பிராட்டியின் கற்புநிலையைத் தான் கண்டறிந்ததை இதனால் தெரிவிக்கின்றான். கோறல் - தொழிற்பெயர். பி - ம்:—[1]இடை. [2]இருந்த. (எஉ)

எங. ஆயிடை யணங்கின் கற்பு மையநின் னருளுஞ் செய்ய
தூயநல் லறனு மென்றிங் கினையன தொடர்ந்து காப்பப்
போயின னரக்கி மாரை[1]ச் சொல்லுமின் பொதுவி னென்றாங்
[2]கேயின னவரெ லாமென் மந்திரத் துறங்கி யிற்றார்.

(இ - ள்.) ஐய—! அ இடை - அப்பொழுது, அணங்கின் - பிராட்டியினது, கற்பும் - கற்புநிலையும், நின் அருளும் - உனது கருணையும், செய்ய தூய நல் அறனும் - செவ்வையாகிய பரிசுத்தமான நல்ல தருமமும், என்ற இங்கு இனையன - என்கிற இவைகளெல்லாம், தொடர்ந்து காப்ப - (பிராட்டியினுயிரை) விடாமற்பாதுகாக்க, (அவளைக் கொல்லாதுவிட்டு), ஆங்கு - அப்பொழுது, (இராவணன்), அரக்கிமாரை - (அருகிற் காவல்செய்துநின்ற) ராக்ஷசிகளைநோக்கி, சொல்லுமின் என்று - '(நீங்கள் சீதைக்குப்) புத்தி சொல்லி என்கருத்துக்கிணங்கச் செய்யுங்கள்' என்று, பொதுவின் ஏயினன் - பொதுவாகக் கட்டளையிட்டுவிட்டு, போயினன் - (தன்னிடத்திற்குச்) சென்றான்; அவர் எலாம் - அவ்வரக்கியரெல்லாம், என் மந்திரத்து - யான் உச்சரித்த மந்திரத்தின் வலிமையால், உறங்கி இற்றார் - தூங்கிவிட்டார்கள்; (எ - று.)

அநுமான் தனக்குச் சீதையைக் கண்டுபேசுமாறு சந்தர்ப்பம் வாய்த்தமையை விவரிக்கின்றான். பொதுவின சொல்லுமின் என்று

இயைத்து, மனிதரது இழிவையும் எனது பெருமையையும் பொதுப்பட இவட்கு எடுத்துக்கூறி இவளை இசைவியுங்க ளென்றும் பொருள் கொள்ளலாம். அரக்கியர் கண்விழித்திருக்கையில் தான்சென்று பிராட்டியுடன் பேச விடா ராதலாலும் இரகசியம் வெளிப்பட்டுவிடு மாதலாலும், அநுமான் மந்திரபலத்தால் அவர்களை உறங்கும்படி செய்தன னென்க. பி - ம்.—[1]சொல்லுமின்வெறுமின், சொல்லுமின்போமின். [2]ஏயினவவர்களெல்லாமந்திரத்துறங்குகின்றார். (௭௩)

௭௪. அன்னதோர் பொழுதி னங்கை யாருயிர் துறப்ப தாக, வுன்னினள் கொடியொன் றேந்திக் கொம்பொடு முறைப்பச் சுற்றித், தன்மணிக் கழுத்திற் சார்த்து மளவையிற் றடுத்து நாயேன், பொன்னடி வணங்கி நின்று நின்பெயர் [1]புகன்ற போழ்தில்.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) அன்னது ஓர் பொழுதில் - அத்தன்மையதான சமயத்தில், நங்கை - பிராட்டி, ஆர் உயிர் துறப்பது ஆக - அருமையான (தனது) உயிரை விட்டிடுவதாக, உன்னினள் - நினைத்தவளாய், கொடி ஒன்று ஏந்தி - ஒரு கொடியை யெடுத்து, கொம்பொடும் உறைப்ப சுற்றி-ஒருமரத்தின் கிளையிலே உறுதியாகக் கட்டி, தன் மணி கழுத்தில் - தனது அழகிய கழுத்திலே, சாத்தும் அளவையின் - சேர்த்துச் சுருக்கிட்டுக்கொள்ளுஞ் சமயத்தில், நாயேன் - நாய்போற் கடைப்பட்டவனாகிய அடியேன், தடுத்து - (அதனை) தடைசெய்வதாகி, பொன் அடிவணங்கி நின்று - அழகிய (அப்பிராட்டியின்) திருவடிகளை நமஸ்கரித்து நின்று, நின் பெயர் புகன்ற போழ்தில் - உனது திரு நாமத்தைச் சொன்ன பொழுதில்,—(எ - று.)

மணிக்கழுத்து-இரத்தினாபரணங்களை யணிந்த கழுத்தென்றும, பொன்னடி - பொன்னாபரணங்களை யணிந்த பாதமென்று மாம். 'நாயேன்' என்றது, பணிவினால தன்னைத் தாழ்த்திக்கூறியது; [நைச்யாநுஸந்தாநம்.] இராமன்பெயரை அநுமான்புகன்றதே பிராட்டி சுருக்கிட்டுக்கொண்டு உயிர் மாய்ப்பதைத் தடைசெய்ததென்க: "அஞ்சன வண்ணத்தான் றன் பெயருரைத் தளியையென்பாற், றுஞ்சுறுபொழுதிற்றந்தாய்துறக்கல்" என மேற்செய்யுளில்வருவதுங்காண்க. பி - ம்:—[1]புகழ்ந்த. (௭௪)

௭௫. வஞ்சனை யரக்கர் செய்கை [1]யிதுவென மனக்கொண்டேயு, மஞ்சன வண்ணத் தான்றன் பெயருரைத் [2]தளியை யென்பாற், றுஞ்சுறு பொழுதிற் றந்தாய் [3]துறக்கலென் றுவந்து சொனனாண், [4]மஞ்செசன வனமென் கொங்கை வழிகின்ற மழைக்கணீராள்.

(இ - ள்.) மஞ்சு என - (மலைமேற்பெய்கிற) மழைபோல், வனம் மெல கொஙகை வழிகின்ற - அழகிய மென்மையான (தனது) தனங்களின்மேற் பெருகுகின்ற, மழை கண நீராள - குளிர்ந்த கண்களின் நீரையுடையவ

ளாகிய பிராட்டி,—இது வஞ்சனை அரக்கர் செய்கை என மனம கொண்டே யும் - யான் இவ்வாறு செய்ததை வஞ்சனையையுடைய இராககதரது மாயச செய்கையா மென்று மனத்தில்நினைத்துச சந்தேகிததும், (என்னைநோக்கி), 'எனபால் அளியை - என்பக்கல் அருளுடையவன் நீ; துஞ்சுறு பொழுதில- (யான்) இறக்கும்பொழுதில், அஞ்சனம வண்ணத்தான்தன் பெயர் உரைத்து- மைபோலுங கரிய திருநிறமுடைய ஸ்ரீராமனது திருநாமத்தைச சொல்லி, துறககல தந்தாய்-(யான் மரணததை) ஒழிதலைச செய்தாய்', என்று உவந்து சொன்னாள் - என்று மகிழ்ச்சியோடு சொன்னாள்; (எ - று.)

"அரக்கனேயாக வேறோரமரனேயாக வன்றிக, குரககினததலைவ னேதா னுககு கொடுமையாக, விரககமேயாக வாநிங கெம்பிரானுமஞ் சொல்லி, யுருக்கினனுணாவைததந்தா னுயிரிதி னுதவியுணடோ" என்று உருககாட்டுபடலத்தில் வந்த செய்யுள் இஙகுக காணததககது. மஞ்சென வனமென்கொஙகை வழிகின்ற மழைக்கணீரான்—"தழைததபொன் மூலைத் தடஙகடந தருவிபோய்ததாழப், புழைததபோல நீர நிரந்தரம் பொழிகின்ற பொலிவா, விழைக்கு நுணணிய மருஙகுலா ளிணைநெடுஙகணகள், மழைகக ணென்பது காரணக்குறியென வகுததாள்" என்றா காட்சிப்படலத்தும. என்பால் துறக்கல் தந்தாய் - என்னிடத்து உயிரொழிதலைததந்தாய்: (ஆத லால்), அளியை - அருள் செய்தறகுஉரியை என்று உரைததலுமாம். [3]துறக்க மென்றும் எனப் பாடமோதி, துஞசுறுபொழுதில் - நான் இறக்குஞ்சமயத் தில், அஞ்சன வண்ணததான்தன் பெயர் உரைதது - இராமபிரானது திரு நாமததைச் சொல்லி, எனபால் அளியை தந்தாய் - என்பககல் கருணையைச செய்தாய்; துறக்கம் - (அககருணை) பரலோக இன்பததுக்குச சமமானது, என்று உவந்து சொன்னாள்' என வுரைப்பாரு முளா. பி - ம்:—[1]ஆமென. [2]அளிய. [4]மஞ்சனமெனனக். (௭௫)

௭௬. [1]அறிவினிற் றேறிச் சொன்ன பேரடை யாளம் [2]யாவுஞ்
செறிவுற நோக்கி நாயேன் சிந்தையிற் [3]றிருக்க மின்மை
முறிவற வெண்ணி வண்ண மோதிரங் காட்டக் [4]கண்டா
ளிறுதியி னுயிர்தந் தீயு மருந்தொத்த தனைய தெந்தாய்.

(இ-ள்.) எந்தாய்-எமதுதலைவனே!—சொன்ன-(அடியேன்) சொன்ன, பேர் அடையாளம் யாவும-பெரிய அடையாளஙகளை யெல்லாம், (பிராட்டி), அறிவினின் தேறி - (தனது) அறிவினால் தெரிய அறிந்து, செறிவு உற நோககி - (அவ்வடையாளஙகளைப்) பொருததமாகப் பாாதது, நாயேன் சிந் தையில் திருககம் இன்மை முறிவு அற எண்ணி - அடியேனது மனததில் மாறுபாடில்லாமையை வேறுபாடிலலாமல் அறிநது, வணணம் மோதிரம காட்ட கணடாள் - அழகிய (நினது) மோதிரததை (யான் எடுதது)க காட் டப பாாததாள்; அனையது - அநத மோதிரமானது,— (அப்பிராட்டிககு), இறுதியின உயிா தந்தீயும மருநது ஒததது - மரணகாலததில் உயிரை

இறவாதபடி நிலைநிறுத்திக்காக்கிற (மிருதசஞ்சீவியென்னும்) மருந்தைப் போன்றது; (எ - று.)

திருக்கம் - தொழிற்பெயர்; திருகு - பகுதி. அம்மோதிரத்தைக் கண்டவுடனே பிராட்டியின் உயிர் நிலைநின்றது என்பது, நான்காமடிக்குக்கருத்து. "வீயுமுயிர்மீளும், மருந்துமெனலாகியது வாழிமணியாழி" என உருக்காட்டு படலத்தில் வந்தது முணர்க. தருமென்பது 'தந்தீயும' என விகாரப்பட்டு வந்தது அது, வினைத்திரிசொல் எனப்படும்: "மதித்தீந்தை" "மறுதீவாள்" என்பன முதலியன காண்க. பி - ம்:—[1]அறிவுறத்தெரியச. [2]ஐய. [3]தெரிகருந் தன்மை குறியுரையென்ன, தெரிகருந்தன்மை குறிப்புரையெனணி. [4]காண டாள். (எசு)

எஎ. ஒருகணத் திரண்டு கண்டே னொளிமணி யாழி [1]யான்ற
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயி னால்வெந்
துருகிய துடனே யாறி வலித்தது [2]குளிர்ப்புள் ளூற.

(இ - ள்.) செல்வ - எல்லாச்செல்வமு முடையவனே!—ஒரு கணத்து - ஒருகணப்பொழுதிலே, இரண்டு கண்டேன் - இரண்டுதன்மையை (யான்) பார்த்தேன்; (அவை என்னவெனில்,)—ஒளி மணி ஆழி - விளங்குகின்ற இரத்தினம்பதித்த மோதிரத்தை(ப் பிராட்டி என்கையினின்றும் வாங்கி), ஆன்ற திரு முலைத் தடத்து - சிறந்த (தனது) கொங்கைகளில், வைத்தாள் - வைத்துக்கொண்டாள்: வைத்தலும் - வைத்தவுடனே, (அப்பொன்மோதிரம்),—நின்பால் விரகம் என்பதனின் வந்த வெம் கொழுந் தீயினால் - உன்னிடத்தினின்றும் பிரிந்ததென்பதனாலுண்டான வெப்பமாகிய செழித்த நெருப்பினால், வெந்து உருகியது - காய்ந்து இளகிவிட்டது; குளிர்ப்பு உள் ஊற - (மோதிரம் உடம்பிற்பட்ட மகிழ்ச்சியினாலாகிய) குளிர்ச்சி உடம்பில் மிகுதலால், உடனே ஆறி வலித்தது-அப்பொழுதே (அவ்வெப்பம்) தணிந்து இறுகி முன்போலாய்விட்டது; (எ - று.)

மோதிரம் பிராட்டியின் விரகாக்கினியால் உருகுதலும், உடனே மகிழ்ச்சியாலாகிய குளிர்ச்சியால் ஆறி இறுகுதலும் ஆகிய இரண்டு தன்மையையும் ஒருகணத்திற் கண்டேனென்றதாம். உயர்வுநவிற்சியணி. ஆன்ற - அகன்ற வென்பதன் மரூஉ. பி - ம்:—[1]ஊன்றத். [2]துளித்ததாகி. சிலபிரதியில் இச்செய்யுள் அடுத்தசெய்யுளின் பின் உள்ளது. (எஎ)

எஅ. வாங்கிய வாழி தன்னை வஞ்சரூர் வந்த தாமென்
றோங்குயர் மழைக்க ணீரா லாயிரங் கலச மாட்டி
யேங்கின [1]ளிருந்த தல்லா லியம்பல [2]ளெய்த்த மேனி
[3]வீங்கினள் வியந்த தல்லா லிமைத்தில ளுயிர்ப்புவிண்டாள்.

(இ - ள்.) (பிராட்டி),—வாங்கிய ஆழிதன்னை - (என்கையினின்றுதன் கையில்) வாங்கிக்கொண்ட மோதிரத்தை, வஞ்சர் ஊர் வந்தது ஆம் என்று -

வஞ்சனையுடையவர்களான அரக்கர்களது நகரத்தில் வந்ததனால் அபரிசுத்தி யடைந்ததென்று,—ஆங்கு - அப்பொழுது, உயர் மழை கண் நீரால் - மிக்க மழைபோன்ற ஆனந்தக்கண்ணீரினால், ஆயிரம் கலசம் ஆட்டி - ஆயிரங்குடம் அபிஷேகஞ்செய்து, ஏங்கினள் இருந்தது அல்லால் - இரங்கிக்கொண்டிருந்த தல்லாமல், இயம்பலள் - (ஒன்றுஞ்) சொல்லமாட்டாதவளாயினாள்; எய்த்த மேனி வீங்கினள் - இளைத்திருந்த உடம்பு பூரித்தது, வியந்தது அல்லால் - அதிசயப்பட்டதல்லாமல், இமைத்திலள் - (நோக்கின கண்களை) மூடினா ளில்லை; உயிர்ப்பு விண்டாள் - பெருமூச்செறிந்தாள்; (எ - று.)

மோதிரத்தைக் கண்டு கையில் வாங்கி நோக்கியவுடனே பிராட்டியின் கண்களினின்று தாரைதாரையாகப் பெருகுகின்ற கண்ணீர்வெள்ளத்தில் அம்மோதிரம் நனைந்ததனை, வஞ்சகராகிய ராக்ஷசரது ஊரில் வந்ததனால் அதற்கு உண்டான அசுசியைப் போக்கக் கருதி அவள்பலகுடமநீரைக்கொண்டு நீராட்டுவித்ததாக உத்பிரேக்ஷித்ததனால் தற்குறிப்பேற்றவணி. வஞ்சகரினூர்க்குவருவதே நல்லவாக்கு இழுக்காகு மென்ற பொருள் இதிற்புலனாம். இங்கு 'ஆயிரம' என்றது, பலவென்னும் மாத்திரையாய் நின்றது. பி - ம்:—[1]குழிந்ததல்லாலிடைந்திலள். [2]உயிர்ப்பும் விட்டாள். [3]ஓங்கியவுவகையோடு முன்னின்றவூசனின்றாள், ஓங்கிய வுவகையோடு முணணின்றவூசனீங்கி.

௭௬. அன்னவற் [1]கடிய னேனிற் பிரிந்தபி னடுத்த வெல்லாஞ்
சொன்முறை யறியச் சொல்லித் தோகைநீ யிருந்த சூழ
லின்னதென் [2]றறிகி லாமே யித்தனை தாழ்த்த தென்றே
மன்னநின் வருத்தப் பாடு முணர்த்தினே னுயிர்ப்பு வந்தாள்.

(இ - ள்.) மன்ன - தலைவனே!—அடியனேன் - யான், அன்னவற்கு - அப்பிராட்டிக்கு, நின் பிரிந்த பின் அடுத்த எலலாம் - உன்னைப்பிரிந்த பினபு சேர்ந்த செயதிகளையெல்லாம், சொல் முறை அறிய சொல்லி - யான்சொல் லும் முறையால் அறியும்படி சொல்லி,—'தோகை - மயில்போன்றவளே! நீ இருந்த சூழல் - நீ இருந்த இடம, இன்னது என்று அறிகிலாமே - இன்ன விடத்ததென்று தெரியாமையினாலேயே, இத்னை தாழ்த்தது - இவ்வளவு காலம நீட்டித்தது,' என்று - என்றுஞ் சொலலி, நின் வருத்தப்பாடும் உணர்த்தினேன் - (அவளைபபிரிந்ததனால்) நீவருந்தப்படுந்தன்மையையும் தெரியச் சொன்னேன்; (அதன்பின்பு), உயிர்ப்பு வந்தாள - உயிர்நீங்காதிருக்கப்பெற றாள்; (எ - று.)

அறிகிலாமே - மேயீற்று எதிர்மறைத் தெரிநிலைவினையெச்சம. வருத் தப்பாடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். பி-ம்.—[1]அடியேனும்மிற், அடி யனுன்னில். [2]அறிகிலாமை. (௭௬)

௭௦. இங்குள தன்மை யெல்லா [1]மிளையபூழி யியையக் கேட் டா; எங்குள தன்மை யெலலா [2]மடியனுக் கறியச் சொன்னு, டிங

களொன் றிருப்பெ [3]னினனுந் திருவுளந் தீர்ந்த பின்னை [4]மங்குவெ
னுயிரொ டென்றுன் குரைகழற் றலைககண் வைத்தாள்.

(இ - ள.) இஙகு உள தன்மை எல்லாம - இவ்விடததிலுள்ள தன்மை களையெல்லாம், இயைபுழி இயைய கேட்டாள - நிகழ்ந்தமுறையிற் பொருந் தககேட்டு. அஙகு உள தனமை எல்லாம - அவ்விடத்திலுள்ள தன்மைகளை யெல்லாம், அடியேனுககு - அடியனுககு, அறிய சொனனாள் - தெரியச சொல்லி, - 'இன்னே - இனி, திஙகள் ஒன்று இருப்பென் - ஒருமாதகாலம் (இஙகே) உயிர்வைத்திருபபேன; திருஉளம் தீர்ந்த பின்னை - (அதற்குள் என்னை வந்து அழைததுப்போகச சக்கரவாததித திருமகனுக்கு) மனமில்லை யாகுமாஞல் அதன்பின்பு, உயிரொடு மஙகுவென்-உயிரிழப்பேன்,' என்று - என்றுசொல்லி, உன் குரை கழல் தலைக்கண வைததாள் - உனது ஒலிக கின்ற வீரக்கழலையணிநத திருவடியைத (தனது) தலையின்மேல வைததுத (திககுநோக்கித்) தணடன் சமாப்பிததாள; (எ - று.)

உயிரொடு மஙகுவென் - வலிய உயிரவிடுவே னெனறபடி. உன் குரை கழல் தலைககண வைத்தாள் - பாவனையினால் நினது திருவடியைத தலைமேற் கொண்டு வணஙகினளென்றபடி. பி - ம்.—[1]இயல்புளி. [2]அடியனேற்கு. [3]என்றுளன்னது. [4]மஙகுவதுயிருண்டென்றனமலரடி. (அ௦)

அக.—சீதை தந்த சூளாமணியை அநுமான் இராமனிடங் கொடுத்தல்.

வைத்தபின் றுகிலின் வைத்த மாமணிக் கரசை வாங்கிக
கைத்தலத் தினிதி னீநதா டாமரைக் கண்க ளார
வித்தக காண்டி யென்று கொடுததனன் வேத நன்னூ
லுய்த்துள கால மெல்லாம புகழொடு [1]மோங்க நிற்பான்.

(இ - ள்.) வைத்த பின் - (அவ்வாறு உனதுதிருவடியைத தலைமேல்) வைத்துககொணடபின்பு,—துகிலின் வைதத மா மணிககு அரசை வாஙகி - தனது ஆடையில் முடிநதுவைத்திருந்த சிறநத இரத்தினஙகளுககெல்லாந் தலைமையாகிய சூளாமணியை எடுத்து, கை தலதது - (எனது) கையில், இனிதின் ஈந்தாள் - இனிமையாகக கொடுததாள்; (அதனை), வித்தக - ஞான சொரூபியாயுள்ளவனே! தாமரை கணகள் ஆர காணடி - செநதாமரை மலர்போன்ற திருககணகள மகிழக காணபாயாக, என்று - என்றுசொல்லி, வேதம் நல் நூல் உய்த்து உள காலம எல்லாம புகழொடும ஓஙக நிற்பான் கொடுததனன் - சிறநத வேதஙகளுஞ் சாஸ்திரஙகளும் வழஙகுவதான கால தத்துவமுள்ள அளவும் கீரததியுடனே மேம்பட (சிரஞ்சீவியாய) நிற பவனாகிய அநுமான (சூளாமணியை ஸ்ரீராமனிடம) கொடுததான்; (எ-று.)

வேதநன்னூல் - வேதஙகளாகிய நல்லநூல்களென்றுமாம். பி - ம்:—
[1]ஓக்க. (அக)

அஉ.—அதுபெற்றவளவில் இராமன் தாபந்தணிந்து மகிழ்தல்.

[1]பையவுட் பயந்த காமம் பரிணமித் துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி யுள்ள மெலிவுறு [2]நிலையை விட்டா
[3]னையனுக் கங்கி முன்ன ரங்கையாற் பற்று நங்கை
கையென லாயிற றன்றே கைபுக்க மணியின் காட்சி.

(இ - ள்.) பைய - மெல்ல, உள் பயந்த - உள்ளேயுண்டான, காமம்—, பரிணமித்து - வளர்ந்து, உயர்ந்து பொங்கி - மேல்மேல் அதிகப்படுதலால், மெய் உற வெதும்பி - உடம்பு மிகவுங்கொதித்து, உள்ளம் மலிவுறும் - மனந் தளர்ச்சியடைகின்ற, நிலையை - தன்மையை, விட்டான - (ஸ்ரீராமன் அச்சூளாமணியைப் பார்த்தவுடனே) நீங்கினான்; கை புக்க மணியின் காட்சி - (ஸ்ரீராமனது) திருக்கையை யடைந்த சூளாமணியினது தோற்றம், ஐயனுக்கு - அந்த இராமபிரானுக்கு, அங்கி முன்னர்அம் கையால் பற்றும் நங்கை கை எனல் ஆயிற்று - (விவாககாலத்தில்) அக்கினியின் முன்னிலையில் அழகிய கையினால் பிடிக்கப்பட்ட பிராட்டியின்கை யென்னலாம்படியாயிற்று; (எ - று.)

இராமபிரான் சீதையைப் பாணிக்கிரகணஞ்செய்தகாலத்திற போலச் சூளாமணியைப் பெற்ற பொழுதில் மிகமகிழ்ந்தன னென்பதாம். காட்சியணி. பைப்பய - பையப்பைய என்னும் குறிப்புவினையெச்ச வடுக்கின் தொகுத்தல் பி - ம்:—[1]பையுறப், பைப்பயப். [2]நிலைமை. [3]ஐயனும். (அஉ)

அங.—அப்பொழுது இராமனிடம் உண்டான பலவகைமெய்ப்பாடுகள்.

பொடித்தன வுரோமம் [1]போந்து பொழிந்தன கண்ணீர் பொங்கித்
துடித்தன மார்புந் தோளுந் [2]தோன்றின வியர்வின் றுள்ளி
மடித்தது மணிவா [3]யாவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி யென்னே [4]யாருளர் தன்மை தேர்வார்.

(இ - ள்.) உரோமம்-மயிர்கள், பொடித்தன - சிலிர்த்தன; கண்ணீர்—, போந்து - வழிந்து, பொழிந்தன - பெருகின; மார்பும் தோளும்—, பொங்கி - பூரித்து, துடித்தன—; வியர்வின் துள்ளி - வேர்வைநீர்த்துளிகள், தோன்றின - உண்டாயின; மணி வாய் - அழகிய வாயானது, மடித்தது - மடிப்பையடைந்தது; ஆவி வருவது போவது ஆகி - உயிர் வருவதும் போவதுமாகப்பெற்று, மேனி தடித்தது - உடம்பு பூரித்தது; என்னே - (இது) என்ன ஆச்சரியம்! தன்மை தேர்வார் - அத்தன்மைகளை ஆராய்ந்து அறியவல்லவர், யார் உளர் எவரிருக்கின்றனர்! [எவருமில்லை யென்றபடி]; (எ-று.)

இராமபிரானுக்கு அப்போதுசேர்ந்த மெய்ப்பாடுகளை யறிந்துணர்த்துவது, எம்மனோர்க்கு இயலாதென்றபடி. 'ஆவிவருவதுபோவதாகி' என்றது, நெட்டுயிர்ப்பெறிதலை. ரோமம் என்னும் வடமொழி, உகரம் மொழி முதலாகி முன்வரப்பெற்றது. பி - ம்:—[1]மேன்மேல் [2]தோன்றினதவரென்றுன்னி. [3]வீரம. [4]தாருத்தனதன்மைதேர்வார். (அங)

அசு.—அங்கதன் முதலானவர்கள் வந்துசேர்தல்.

ஆயிடைக் கவிகளோடு மங்கதன் முதலி னுயோர்
மேயினர் வணங்கிப் புக்கார் வீரனைக் கவியின் வேந்தைப்
போயின கருமமுற்றிப் புகுந்ததோர் பொம்ம றன்னுற்
சேயிரு மதிய மென்னத் திகழ்தரு முகத் தாரானூர்.

(இ - ள்.) அ இடை - அப்பொழுது [அவ்விடத்தில்], கவிகளோடும் - மற்றை வானரர்களுடனே, அங்கதன் முதலின் ஆயோர் - அங்கதன் முதலான படைத்தலைவர்கள், மேயினர் - வந்து, வீரனை - ஸ்ரீராமனையும், கவியின் வேந்தை - வானர ராஜனை சுக்கிரீவனையும், வணங்கி - நமஸ்கரித்து, புக்கார் - அங்குசேர்ந்து, போயின கருமம் முற்றி புகுந்தது ஓர் பொம்மல் தன்னால் - (தாங்கள்) போன காரியம் முடிந்து வந்த தனாலாகிய தொரு மகிழ்ச்சியினால், சேய் இரு மதியம் என்ன திகழ்தரு முகத்தர் ஆனார் - உயர்ந்த [ஆகாயத்திலுள்ள] பெரிய [பூரண] சந்திரன்போல விளங்குகின்ற முகத்தையுடையவரானார்கள்; (எ - று.)

மதியம், அம்-சாரியை. கவி-கபி யென்ற வடசொல்லின் விகாரம். (அசு)

அரு.—மேல் நடக்கவேண்டிய காரியத்தைக் குறித்து இராமன் விரைவுகொள்ளுதல்.

[1]ஆண்டையி னருக்கன் மைந்த னையகே ளரிவை நம்பாற், காண் டலுக் கெளிய ளானு [2]ளென்றலுங் காலந் தாழ, வீண்டினு மிருத்தி போலா மென்றன னென்ற லோடுந், தூண்டிரண் டனைய தோளான் பொருக்கென வெழுந்து சொன்னான்.

(இ - ள்.) ஆண்டையின் - அப்பொழுது, அருக்கன் மைந்தன் - சூரிய குமாரனான சுக்கிரீவன், (ஸ்ரீராமனை நோக்கி), 'ஐய—! கேள்—: அரிவை - பிராட்டி, நம்பால் காண்டலுக்கு எளியள் ஆனாள் - நம்மாற் பார்ப்பதற்கு எளியவளாயினாள்,' என்றலும் - என்றுசொன்னவளவில், - (ஸ்ரீராமபிரான்) 'காலம் தாழ - காலம் விளம்பிக்க, இனும் - இன்னமும் [சீதையிருக்குமிடந் தெரிந்தபின்பும்], ஈண்டு - இங்கேயே, இருத்திபோல் ஆம் - இருக்கின்றாய் போலும்,' என்றனன் - என்றுசொன்னான்; என்றலோடும் - என்றுசொன்ன வுடனே, தூண் திரண்டு அனைய தோளான்-தூண் திரண்டிருப்பது போன்ற தோள்களையுடையவனான சுக்கிரீவன், பொருக்கென - விரைவில், எழுந்து எழுந்திருந்து, சொன்னான் - கட்டளையிடுபவனானான்; (எ - று.)

'அரிவை' என்னுஞ் சொல் - இங்கே, பருவப்பெயராகாமல், பெண் என்ற மாத்திரமாய் நின்றது. நம்பால் - உருபுமயக்கம். இனும் - இன்னும்: தொகுத்தல். 'இருத்திபோலாம்' என்றது - இருத்தல் ,சகுதியன் றென்றபடி.

பி - ம்:—[1]ஆண்டையவ், ஆண்டைகை. [2]என்றபின் காலந்தாழா. (அரு)

அசு.—சுக்கிரீவன்கட்டளைப்படி வாநரசேனை புறப்படுதல்.

*எழுக[1]வெம் படைக ளென்றா [2]னேயெனு மளவி னெங்கும்*
*முழுமுரா [3]செற்றிக் கொற்ற [4]வள்ளுவர் [5]முடுக்க முந்திப்*
*[6]பொழிதிரை யன்ன வேலை புடைபரந் தென்னப் பொங்கி*
*வழுவலில் வெள்ளத் தானை தென்றிசை வளர்ந்த தன்றே.*

(இ - ள்.) 'ஏ எனும் அளவின் - ஏயென்னுமொலி உண்டாகுமளவினுள் [மிகவிரைவில் என்றபடி], வெம் படைகள் - கொடிய சேனைகளெல்லாம், எழுக - புறப்படுவனவாக,' என்றான்-என்று (சுக்கிரீவன்) கட்டளையிட்டான்; (உடனே), கொற்றம் வள்ளுவர் - வெற்றியையுடைய பறையறைவோர், எங்கும் - (சேனைகளுள்ள) எல்லாவிடத்தும், முழு முரசு எற்றி-பெரிய பறைகளை யறைந்து, முடுக்க - துரிதப் படுத்த,—வழுவல் இல் - (அசசுக்ரீவாஜ்ஞையைத்) தவறுதலில்லாத, வெள்ளம் தானை - (எழுபது) வெள்ளம் வாநர சேனை, முந்தி-விரைந்து, பொழி திரை அன்ன வேலை புடை பரந்து என்ன பொங்கி - பாய்கின்ற அலைகளையுடைய அந்தக்கடல் தானிருக்கும் நிலையை விட்டு வெளியிலே பரவினாற்போல எழுந்து, தென் திசை வளர்ந்தது - தெற்குத்திக்கை நோக்கிப் பரவலாயிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

எம் படைகள் என்று பிரித்தும் உரைக்கலாம். முழு முரசு - உத்தமவிலக்கணமமைந்த பேரிகை யெனினுமாம். அன்ன - பிரசித்தி பற்றியது.
பி - ம்.—[1]என்படைஞா. [2]என்றதோரளவிலெங்கும். [3]ஒற்றக். [4]வள்ளுவன. [5]முடுகி. [6]எழுதிரை பொழுதுலா. (அசு)

அஎ.—முன்சென்று சரியானவழியை நாடிப்போமாறு இராமன் நீலனைப் பணித்தல்.

*நீலனை நெடிது நோக்கி நேமியோன் பணிப்பா [1]னந்தம்*
*பால்வருஞ் சேனை தன்னைப் பகைஞர்வந் தடரா வண்ணஞ்*
*சால்புற முன்னர்ச் சென்று சரிநெறி துருவிப் போதி*
*மால்தரு களிறு [2]போலும் படைஞர்பின் மருங்கு சூழ.*

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) நேமியோன் - ஸ்ரீராமன், நீலனை - (வாநரசேனாதிபதியான) நீலனை, நெடிது நோக்கி - செவ்வையாகப் பார்த்து, பணிப்பான் - கட்டளையிடுவான்—நம்தம் பால் வரும் சேனை தன்னை - நமது பக்கத்தில் வருகிற சேனையை, பகைஞர் வந்து அடரா வண்ணம் - சத்துருக்கள் வந்து அழிக்காதபடி, (நீ), மால் தரு களிறு போலும் படைஞர் பின் மருங்கு சூழ-மதமயக்கங்கொண்ட ஆண்யானைபோன்ற வீரர்கள் பின்பக்கத்தில் தொடர்ந்துவருமாறு, சால்பு உற - தகுதிபொருந்த, முன்னர் சென்று - முன்னேசென்று, சரி நெறி துருவி போதி - தகுதியானவழியைத் தேடிப்போவாயாக; (எ - று.)

"ஆறுபதெழுகோடியமீகருக், கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன், கூறு சேனைபதிகொடுமைகூற்றையு, நீறுசெய்திடுநீலனென்றோதினன்" என்றபடி நீலன் வாநரப்படைத்தலைவாகளெல்லாந் தலைவனாதலால், அவனை முக்கிய மாக விளித்து இது கூறினன் இராமபிரான். நேமியோன் - சக்கராயுதபாணி யான திருமாலின் அம்சமானவன். சரி - ஸத்ருபு என்ற வடமொழியின் சிதைவு; அது, பிராகிருதபாஷையில் ஸரிஸோ என நிற்கும். மால் தரு - பெருமைபொருந்திய என்றுமாம்; எதுகைநோக்கி, சந்திபெறாது நின்றது. துருவி, துருவு - பகுதி. பி - ம்:—[1]நீகம். [2]போலப். (அஎ)

அஅ.—அநுமான் பிரார்த்தித்தபடி அவன்தோள்மேல் இராமன்ஏறுதல்.

[1]என்றுரைத் தெழுந்த வேலை மாருதி யிருகை கூப்பிப
புன்றொழிற் குரங்கெ னாதென் றோளிடைப் புகுதி யென்னத்
தன்றலை படியிற் [2]றாழ்ந்தா னண்ணலுஞ் சரணம் வைத்தான்
வன்றிறல் வாலி சேயு மிளவலை வணங்கிச் சொன்னான்.

(இ - ள்.) என்று உரைத்து - என்று (நீலனுக்குக்) கட்டளையிட்டு, எழுந்த வேலை - (ஸ்ரீராமன்) புறப்பட்டபொழுது, மாருதி - அநுமான், இரு கை கூப்பி - அஞ்சலிசெய்து, 'புல் தொழில் குரங்கு எனாது - இழிவான தொழிலை யுடையதொரு குரங்கு என்று எண்ணி (என்னை) இகழாமல், என் தோளிடை புகுதி - எனதுதோளில் ஏறுவாயாக,' என்ன - என்று விண் ணப்பஞ்செய்து, தன் தலை படியில் தாழ்ந்தான் - தனதுதலை பூமியிற் படு மாறு வணங்கினான்; அண்ணலும் - ஸ்ரீராமனும், சரணம் வைத்தான் - (அங் ஙனமே அவ்வநுமான் தோள்களில்) திருவடியைவைத்து ஏறியருளினான்; வல் திறல் வாலிசேயும் - மிக்கவலிமையையுடைய அங்கதனும், இளவலை வணங்கி - லக்ஷ்மணனை நமஸ்கரித்து, சொன்னான் - சொல்பவனானான்; (எ - று.)—அது மேற்கவியிற் கூறுகின்றார். சரணம் - வடசொல். பி - ம்:— [1]என்றவனெழுந்தவேலைமாருதியெதிர்சென்றெய்தாய். [2]தாழ. (அஅ)

அகூ.—அங்கதன்பிரார்த்தித்தபடி அவன்தோள்மேல் இலக்குமணன் ஏறுதல்.

நீயினி யென்றன் றோண்மே லேறுதி நிமல வென்ன
வாய்புதைத் திறைஞ்சி நின்ற வாலிகா தலனை நோக்கி
நாயகற் கிளைய கோவு நன்றென வவன்றன் றோண்மேற்
பாய்தலுந் தகைபபி ரானை படர்நெறி [1]பரந்ததன்றே.

(இ - ள்.) 'நிமல - குற்றமற்றவனே!—நீ—, இனி-இப்பொழுது, என் தன் தோள்மேல் ஏறுதி - எனது தோளின்மேலேறியருள்வாய்', என்ன - என்று விண்ணப்பஞ்செய்து, வாய் புதைத்து - (கைகளால்) வாயை மறைத் துக்கொண்டு, இறைஞ்சி நின்ற - வணங்கி நின்ற, வாலி காதலனை - வாலி புத்திரனான அங்கதனை, நோக்கி - பார்த்து, நாயகற்கு இளைய கோவும் - ஸ்ரீ

ராமனுக்கு இளைய தம்பியாகிய லக்ஷ்மணனும், நன்று என - நல்லதென்று உடன்பட்டு, அவன் தன் தோள்மேல் - அவ்வங்கதனது தோளின்மேல், பாய்தலும் - ஏறினவளவில்,—தகைப்பு இல் தானை - தடையில்லாத வாநரசேனை, படர் நெறி பரந்தது - செல்லவேண்டும் வழியிற் பரவிச் சென்றது; (எ - று.)

படர் நெறி - பரந்த வழியுமாம். அன்று, ஏ - ஈற்றசை. பி - ம்·— [1]படர்ந்த. (அக)

கூo.—அவ்வளவில் தேவர்கள் பூமாரிபொழிதல்.

கருடனில் விடையிற் றோன்று மிருவருங் கடுப்பக் காலி
னருடரு குமரன் றோண்மே லங்கத னலங்கற் றோண்மேற்
பொருடரும் வீரர் போதப் பொங்கொளி விசும்பிற் றங்குந்
தெருடரு புலவர் வாழ்த்திச் சிந்தினர் தெய்வப் பொற்பூ.

(இ - ள்.) கருடனில் - கருடன்மேலும், விடையில் விருஷபத்தின் மேலும், தோன்றும் - எழுந்தருளகிற, இருவரும் - (அரி அரன் என்னும்) இருவரையும், கடுப்ப - ஒக்க, காலின் அருள்தரு குமரன் தோள்மேல் - வாயு வினால் பெறப்பட்ட குமாரனாகிய அநுமானது தோளின்மேலும், அங்கதன் அலங்கல் தோள்மேல் - அங்கதனது போர்மாலையணிந்த தோளின்மேலும் (ஏறிக்கொண்டு), பொருள் தரு வீரர் - (வேண்டுவோர்வேண்டும்) பொருள்களையெல்லாங்கொடுக்கவல்ல ஸ்ரீராமலக்ஷ்மணர், போத - செல்ல, (அப்பொழுது),—பொங்கு ஒளி விசும்பில் தங்கும தெருள் தரு புலவர் - மிக்க ஒளியையுடைய சுவர்க்கலோகத்தில் தங்குகின்றவர்களும் தெளிவைத்தருகிற அறிவையுடையவர்களுமாகிய தேவர்கள், வாழ்த்தி - ('பகைவர்களைவெல்லுக' என்று) வாழ்த்துக்கூறி, தெய்வம பொன பூ - தெய்வத்தன்மையுடைய பொன்மயமான கல்பகவிருக்ஷத்தின்மலர்களை, சிந்தினா - (மேலே) சொரிந்தார்கள்; (எ - று.)

பொன்னுலகமாதலால், 'பொங்கொளிவிசும்பு' எனப்பட்டது கற்பகப் பூவுக்குத் தெய்வத்தன்மை - வாடாமை முதலியன. பொருள் - அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய உறுதிப்பொருள்கள். முதல்மூன்றடிகளில் முறைநிரனிறைப்பொருள்கோள் காண்க. (கூo)

கூக.—வாநரசேனை மலைகளின் வழியாகச் செல்லுதல்.

வையக [1]மதனின் மாக்கண் மயங்குவா வயவெஞ் சேனை
யெய்திடி னென்ப துன்னி யிராகவ னினிதி னேவப்
பெய்கனி கிழங்கு தேனென் றினையன பெறுதற் கொத்த
செய்ய[2]மால் வரையே யாறச் சென்றதத் தகைப்பில் சேனை.

(இ - ள்.) 'வய வெம் சேனை - வலிய கொடிய வாநரசேனை, எய்திடின - (நாட்டுவழியே) சென்றால், வையகமதனில் மாக்கள் - பூமியி

லுள்ள மனிதர்கள், மயங்குவர்-கலங்குவார்கள்,' என்பது என்பதை, உன்னி-எண்ணி, இராகவன் - இராமபிரான், இனிதின் ஏவ - இனிமையாகக் கட்டளையிட,—அ தகைப்பு இல் சேனை - (பிறரால்) தடுக்க முடியாத அச்சேனை,—பெய் கனி - சொரிகின்ற பழங்களும், கிழங்கு - கிழங்குகளும், தேன் - தேனும், என்ற—, இனையன - இப்படிப்பட்டவைகளை, பெறுதற்கு-அடைவதற்கு, ஒத்த - தகுதியான, செய்யமால் வரையே - அழகிய பெரிய மலைகளே, ஆறு ஆ-வழியாக, சென்றது-; (எ-று.)—பி-ம்·—[1]மருங்கின். [2]கல்.()

**கூ௨.—அநுமான் கதைகள்சொல்லிவர அனைவரும் எளிதில் வழிகடத்தல்.**

வீரரும் விரைவிற் போனார் விலங்கன்மே லிலங்கை [1]வெய்யோர்
சோர்விலாக் [2]காவற் பாடும் பெருமையு மரணுங் [3]கொற்றக்
காரிறத் தரக்க [4]ரென்போர் முதலிய கணிப்பி லாத
வார்கழலனுமன் சொல்ல வழி [5]நெடி தெளிதிற்போனார்.

(இ - ள்.) விரைவில் போனார் - விரைவிற்புறப்பட்டவர்களாகிய, வீரரும்-வானர வீரர்களெல்லாரும்,—விலங்கல்மேல்-திரிகூடமலையின் மேலுள்ள, இலங்கை - லங்கையில் வாசஞ்செய்கிற, கொற்றம் - வெற்றியையும், கார் நிறத்து - கரியநிறத்தையுமுடைய, அரக்கர் என்போர்-ராக்ஷசரென்று சொல்லப்படுபவர்களாகிய, வெய்யோர் - கொடியவர்களுடைய, சோர்வு இலா - தளர்ச்சியில்லாத, காவல் பாடும் - காவல் செய்யுந் திறமும், பெருமையும்—, அரணும்—, முதலிய - முதலான, கணிப்பு இலாத - அளவில்லாத சிறப்புகளையெல்லாம், வார் கழல் அனுமன் - நீண்ட வீரக்கழலையுடைய அநுமான், சொல்ல - சொல்லிவர, (கேட்பதனால் இளைப்புத்தோன்றாமலே), நெடிது வழி - நீண்டவழியை, எளிதில் போனார் - எளிதாகக் கடந்துபோனார்கள்.

'வீரரும் விரைவிற்போனார்' என்பதைத் தனிவாக்கியமாக எடுத்து, வானர வீரர்களான சுக்கிரீவன் முதலியோரும் விரைவிற்சென்றார்களென்று உரைத்தலுமாம். பெருமை-தொகையிலும் வலிமையிலும் பெரிதாயிருக்குந் தன்மை. அரண் - மதில் அகழி முதலியன. பி - ம்:—[1]வெய்யோன். [2]வலியுமூரிப், வலியுமூரிக். [3]சொல்லிக். [4]தங்கள் கணிதமும்பிறவுமெல்லாம். [5]இனிதெளிதிற்செல்வார். (கூ௨)

**கூ௩.—அனைவரும் பன்னிரண்டுதினத்தில் தென்கடல்சேர்தல்.**

அந்நெறி [1]நெடிது செல்ல வரிக்குலத் தரச னோடு
நன்னெறிக் குமரர் போக நயந்துடன் புணர்ந்த சேனை
யின்னெடும் [2]பழுவக் குன்றிற் பகலெலா மிறுத்த பின்னர்ப்
பன்னிரு பகலிற் சென்று தென்றிசைப் பரவை கண்டார்.

(இ - ள்.) அ நெறி நெடிது - அந்த நீண்டவழியில், செல்ல - (வானர வீரர்களெல்லாம்) போக, அரி குலத்து அரசனோடு - குரங்குக்கூட்டத்துக்கு

அரசனுன சுக்கிரீவனுடன், நல் நெறி குமரர் - சன்மார்க்கத்திற்செல்லுகிற ராமலக்ஷ்மணர்களும், போக - செல்ல, நயந்து உடன் புணர்ந்த சேனை-விரும்பிக் கூடவந்த வானரசேனைகளெல்லாம்,— இன் நெடும் பழுவம் குன்றில் - இனிய நீண்ட சோலைகளையுடைய மலைவழியிலே, பகல் எலாம் இறுதத பின்னா - பதினொருநாளையும கழித்த பின்பு, பன்னிருபகலில் - பன்னிரண்டாம நாளில், சென்று - போய், தென் திசை பரவை கணடார் - தெற்குத்திக்கிலுள்ள கடலைக் கணடார்கள்; (எ - று.)—பவழமலை - தொண்டைநாட்டின் மேற்கெல்லைமலை. பி - ம்·—[1]இரண்டுநாளிலங்கதன்முதலினோர்கள் பொன்னடி வணங்கினரைப் புகழ்ந்துடன் பொருந்திப்போவார், [2]பவளக்குன்றின்னுழி. (கூ௩)

திருவடிதொழுதபடலம் முற்றிற்று.

## சுந்தர காண்டம்

முற்றுப்பெற்றது.

---

# சுந்தரகாண்டச் செய்யுளகராதி.



# சுந்தரகாண்டத்தின் அரும்பதவகராதி.

அகடு மத்தி, பஞ்ச-49
அகத்துறையழகன், ஊர்-102
அகம்=வீடு, உருக் - 17. மனம், நிந்த - 73
அகருதூபம, ஊர - 29
அகலுதல், உருக - 61, பொழில் - 1
அகல்உறுதல் - நீங்குதல், உருக் - 87
அகவுதல் - கூத்தாடுதல், நிந்த - 13
அகழி × கிடந்தஏழ்கடல், ஊர-146 இராவணன் படை, ஊர்-149
அகழிஞ்சி, ஊர் - 166
அகழிநீர யானைமத முதலியனநாறுதல், ஊர - 150
அகழியிற்பலவகை மணிகளினொளி வீசுதலின் வருணனை, ஊர - 155
அகழ்தல்=பேர்த்தெடுத்தல்: சூளா - 24 [றல்காணடி, பாசப் - 11
அககனைகொன்ற குரங்கினையாற்
அக்கன், ஊர - 144
அங்கணமாஞாலம், நிந்த - 49
அங்கதன் ததிமுகனுககு முகமன் சொல்லல், திருவடி - 50
அங்கதன் தோளமிசை விளங்கும் இளவல் + (உதய) மலை பொங்கு வெங்கதிர, சூளா - 73
அங்கதன் முதலியோர ததிமுகாதியரை வெல்லுதல், திருவடி - 24, 25
அங்கதாதியர் செயல் சீதைமேம்படு கற்பினளென்று புகலும், திருவடி - 41
அங்காரதாரை யனுமானை நாடிவரல் × மதுகைடபர் திருமாலை நாடிவரல், கடறாவு - 76
அங்குரம்=முளை, உருக் - 53
அசனி - இடி, பாசப் - 4, கிங்க - 1: வச்சிராயுதம், கிங்க - 15
அசனியினணிகள், கிங்க. வதை-15
அசும்பு - ஊற்று, கடறாவு - 89
அசும்பூறுதல், வடிதல், ஊர் - 209
அசோகவனததுச சீதாபிராட்டி தங்கிய மரம்மாத்திரம் அழியாமை - மும்முறை யுலகமெல்லாம முறறமுடிவதான வம்முறை யையனவைகுமால்சிற்றல் பொழி-44
அசோகவனத்தைத் தீசசுடவிலலையென்று வித்தியாதரா கூறுதல், இலங - 61
அசசஞ்சுற்றல், சம்பு. வதை-14
அசசுறுத்தி விடப்பெற்ற சீதை × பொங்கராநுங்கிக் கான்ற தூய வெணமதி· நிந்த-75
அஞ்சனம, ஊர்-4, 109 [48
அஞ்சனைசிறுவன், நிநத-20, பஞ்ச
அஞ்சுதல்-பயப்படுதல்; நிந்த-48
அஞ்சுவ(ண)ண வாடை, ஊர-79
அடகு, காட்சி - 15
அடங்குதல், உருக - 106
அடர்கள்-வெற்றிகள், பிணி-33
அடர்தல்-நெருங்குதல், பஞ்ச-61
அடாத்தல் × வருந்துதல், நிந்த-25, சூளா-68 [20
அடல்-வலிமை, கடறா-31, பொழி -
அடிக்கொழுந்து, நிந்த - 45
அடிதாழ்தல், சூளா-2
அடித்து உண்ணுதல், கிங்க - 61
அடிபெயர்த் திடுதொறும் பரவைதிரைதவழ்ந்து இலங்கையிற்றிசைதொறு நிமிர்தல், நிந்த-17
அடியினிறைஞ்சுதல், சூளா-28
அடியுறுதல் - முன்னடியிலிருத்தல், கடறாவு-91
அடுதல், நிநத-69
அடுத்தல் - நேர்தல், சேர்தல். உருக்-35, 68. தக்கதாதல், நிந்த-59
அடைகல், பாசப்-33
அடைய - எல்லாம், திருவடி - 37: அட்ச குமாரனுக்கும் அநுமனுக்கும நிகழ்ந்தபோா: அட்ச - 31, 37: அட்சகுமாரனை யனுமானொழித்தல், அட்ச - 38: அட்ச குமாரனோடு சென்ற நால்வகைச் சேனை மிகுதி, அட்ச - 8. அட்ச சேனைகளும அநுமானுக்கும் நிகழ்ந்தபோா, அட்ச - 24, 30: அட்சனணிந்த குண்டலம் முதலியவற்றினின்று மணிகளுகுதல் ×

செயயனுய்க்காட்டல், ஊா-102· அநுமானதுபெருருவம், உருக - 100, 105· பாசப்-41· அனுமான் பெருவடிவஙகொள்ளல், பஞ்ச-29: அநுமான்கொண்ட பேருருவம × உலகெயிற்றிடை கொளேனம, சூளா-8· அனுமனைப் பிரம விஷ்ணுககளின் மாற்றுருவமெனல், பிணி-17: அனுமானது சோாவின்மை, கிஙக-53· அனுமான் கருணை, சம்பு-43· அனுமானது முன்னேநீட்டிய கைகளின்வருணனை, கடாு 38: உடமபின்வருணனை-64: அனுமானது வேகததின்வருணனை - 36 38· அனுமானுடலால்மேலிற்பகலும்கீழிலிருளுமுணடாதல் - 64· கடல்கடகக மேலெழுந்ததன்மை - 16: பாயவெழுகையில் அநுமனது விசையால் மரம் முதலியனவும் உடன் செல்லல் 17: பாதாளலோகததையும்காணுதல-20· தன் வாலினல் விணடு காலினலளந்ததுபோல் மேலுலகளந்தான்-32·கடலகலககு மாறு மலையிற காலகளையூனறுகையில நிகழ்ந்தநிகழ்சசிகள் - 3-12 மைநாகமலையிடங கூறியமுகமன-59,60 சுரசையின்வாயினுட்புககு வெளிவரல்-71: அனுமான வல்லமையையுணாநது தேவா மலாதூவுதல் 71: அஙகாரதாரையுடலைபறிக்கொணடுவருதல் 82 அரககிகுடலைக கொணடுவருதல × கருடன்மலைமுழையினினறு அரவைககொண்டெழுதல-83· அனுமானைககணடுவந்த இலஙகையாள × சுடரோனைககாணுவநதகட்செவி, ஊா-75· அனுமான் இலஙகையினுட்செல்லததொடஙகல்-61 இலஙகை மதிலையடுததல், ஊர்-62 மதிலைக கடந்து நகரினுட்புககசெல்லல 74 இலஙகிணியைக கணடு வருகெனல-81: இலஙகிணியின தெயவப்படைகளையெலலாம்பற்றிவிணணிலெறிதல்-89· அரககியாமுதலிய பலரைப் பார்த்துககொணடு செல்லல-103 121: அனுமன அனுவின்மேருவினுழியாசெனைச செலவன்-134: குமபகாணனைப் பாாததல், ஊர் 121: அகநகரில் நுணணிதிற்சென்று தேடுதல்-169: இராவணன மாளிகையில்தோன்றியவுற்பாதஙகள்-204· படுததிருககுமிராவணனைப்பாாததல்-206· இராவணனை யழிக்கககருதுதல் - 219. அனுமன் றனனுள்ளுறையுமழகனைப்போலெம்மருங்குமுலாவுதல - 234· சீதைக்குத் தன்வரலாறமுதலியவற்றைககூறுதல், உருக-29-36: கூறிய அடையாளசசொறகள, உருக-60, 62 இராமபிரானதுவரலாறறைத தெரிவிததல்-74 94 தோளமேல் ஏறிசசெல்லுதற்குச சீதை உடன்படாது கூறுதல், சூளா-12 26· சீதாபிராட்டி செயதி சொல்லியனுபபுதல - 29-38 அநுமான் வீசியெறிந்தபொன்மயமான மரஙகள மினனலையும, மணிமரங்கள் சூரியகிரணத்தையும, பொடிந்துவீழவனவான மரஙகள தாரகையையும் ஒததன, பொழி-15 அனுமான் செய்கையால் காலனுமோயநதமை, கிஙகரா - 45 அநுமான அறைநத அறை × அருவரை நெரியவிழும அசனி, கிஙகரா-25 அநுமானல் அரககவீரா அழிதல - 25-38 சமமாக யுததஞ்செயதமை - 37 அநுமானல் எறியபபட்ட அரககாததமவீடு முதலியவைகளைததாமே அழிததமை - 42 · விழுபபுண அடைந்தமை - 50 : அரககாகணணினுமனததினுந தனிததனிகலததல், சமபு - 36 : இருகையினுலும பொரல்-25· சேனைகளின் மேல் குதிததல - 34 அநுமான் திரிதல × செஙகோல, வேசையரதுமனம, காறறுடியின் தன்மை, இருவினையுடைததவர் அறிவு - 35 திருமாலடியாா தன்மையைத தெரிவிததல - 36. அனுமானல கொல்லபபட்டுத தனிதது நினற சம்புமாலி × சிஙகததால் கொல்லபபட்ட யானைகளின

நடுவில்யானை யரசனைநிறறல - 41
சமபுமாலியைகெகால்லல - 47.
திறஙகணடு அறமுந்தளிர்ததல் -
49 எதிாக்கததானேசெல்ல இரா
வணன் சினைததல்-51. அரககரை
நேககித தன்தோளையும நோக்
கல், பஞ்ச - 27: அனுமானுல
சடலில்எறியப்பட்டதோ × கட
லில எழும சூரியன்தோ - 40 அ
னுமான் கைககொணடஎழு × சிவ
ன்கைககொண்டமழு - 46. அநு
மானு லெரிககப்பட்டவரககா ×
ஊழிககதிரோ னெரிததவென்பி
லாவுயிா, அட்ச - 27· அனுமன்
வாலாற்சுற்றி யட்சனைப்பறறிக
கொணடு அவன்மேலேறுதல்-36.
இந்திரசித்தைதக கணடுகொணடஆ
லோசனை, பாசப் - 25 - 27 அநு
மன்,வாரும்வாருமென்றழைததல்,
பாசப் - 35. தோளபுடைததல -
37. வீரவாதம - 39. அனுமனபே
ருருவைககண்டு இந்திரசிததுவிய
ததல் - 42: அனுமன்பின் சென்ற
அறம - 58: அனுமன்பிணிபபுண
டநாள் × இந்திரன்பிணிப்புணட
நாள் - 63. பிணிப்புணடதுகணடு
உவகையாலரககாகள கூறியன ×
பிணி-125; அனுமனசிரததிருநது
திருவாஙகுவோமெனல் - 5· கட்
டுணடதை வேடிக்கைப் பாாககப்
பலவிடஙகளிலு மரககா திரளு
தல்-14 பாசததாற்கட்டுணடான
போன்றிருந்ததறகுக்காரணம-19,
21 - 24. அனுமன் பிணிப்புணட
தைத தூதுவாகூறல்-26. அனுமன்
பிடிபட்டதைத திரிஜடை சீதை
க்குக்கூறல்-30: அனுமன்பிணிப
புணணவருந்துஞ் சீதை × கன்று
பிடியுறத நீஙகுறுதாய்-36. இராவ
வணனைககொல்லலாமா வெனறு
லோசிததல-56-59. ராவணனரு
கிற்சோதல்-65· தானின்றுனென்
பதும வந்தகாரணமும-82. இரா
வணனுக்கு நீதியுணாததல - 91 -
106 வால்கொளுத்திவிடுமாறுஇரா
வணன்சொல்லுதல் - 117: அனு
மனுடைய பிரமாத்திரத்தை விடு
விததுபபாசததாற் கட்டி யிழுத
தல-118· அனுமன வாலிலரககர்
தீககொளுவுதல்-123· அனுமான்
செய்தியையறிந்து சானகிவருந்து
தல்-126 அனுமனுடலிற் சுற்றிய
கயிறு × கலுழனைசசுறறிய அர
வின்சுறறம-134: இலஙகையெரிக்
குஞ் செயலைககணடுசிவனுணுகல்-
135: தன்வாலையிலஙகையினமீது
செலுததுதல - 135 . பிணிபபினி
ன்றுமீளவறிந்தும்அறியாதானபோ
னறுன் × விஞ்சைதனை யறிந்தும
அறியாதான,பொயயைமெய போ
னடிககின்றயோகி-122 அனுமான்
தனைவளைநது கொணட வீரரை
வாலினுல் வளைததல, இலங 54·
அனுமான்மீணடுவருவது கணட
வானராகள் × தாய்வரக்கணட பற
வைப்பார்ப்புககள், திருவடி-3: அனு
மன்மீட்சிகண்டவானரரின மகிழச
சிசெயல், திருவடி-4· அனுமனை
வானரருபசரிததல 5; அனுமனுட
லின விரணஙகளைககணடு வான
ராவருநதல்-6: அஙகதனைப்பணி
நது பின்னை சாமபவானைக காலு
றப்பணிதல், 7, வெனறியை யுரை
பப வெளகி மறறவைகூறல் 9.
அனுமனுதியா மீணடுவாராமை பற
றிய இராமன சிநதனை - 32, 35.
அனுமன் செயலைகயாற் சீதை கற
புடையளாய் இனிதிருககினறு
ளெனவுணாதல், 56. 'கணடனெ
கறபினுககணியை யெனல், 58;
சீதை கறபுடையளாயிருக்க கணட
மையை-விவரிததுககூறல் 59-87:

அனைய, உருக-19, பொழி-22
அனையன, உருக-44
அன்பா, கடறு 12
அனறுதல், பஞ்ச-45
அனனம × அபககியா, ஊர்-103
அன்ளிறததணனல், பிணி-136
ஆகம், சூளா 68, உருக-46 உடமபு,
ஆகாயம × சுரபி, ஊா-56 [உருக-77
ஆசறுதல, உருக்-20
ஆசு - ஆமோ; விரைவு, ஊா 59,
பறறுசு, கட்டு, சிந்தனை-22: குற்
றம; சூளா-75

இறைஞ்சுதல, உருக 26 சூளா-89
இறைவன, உருக-75
இற்பிறப்பு, சூளா-17
இற்றுவீழ்தல, நிநதனை-45
இறவேறுதல், அட்ச-35 [30
இனம, உருக-53, சூளா-57, அட்ச-
இனிது, நிநத-63. பொழி-7
இனிமை, பொழி-17
இன்று நாளையோடழிந்தது மதுவனம, திருவடி 37
இன்னல், உருக-76, சூளா-1, 37
ஈசனசூலம, பஞ்ச-17
ஈட்டம், உருக-100
ஈட்டு-சோலை, நிகரர்-6 வலி, காட்சி-60
ஈட்டுதல்-திரட்டிச சொல்லுதல், சூளா-2. சமபாதித்தல, பொழி - 51
ஈமம், பிணி-97
ஈரம-குளிர்சசி, உருக-52, சூளா - 30: வெள்ளம், பாசப-19
ஈர்ததல, சூளா-58
ஈனம, பொழி-2
உ-அப்பால், ஊர்-191
உகல், கடறு-4, நிந்தனை-35, 63, 69
உகிர, உருக-41
உகிர்ககுறி, பிணி-39
உஙகை, நிநதனை-57
உடலுடறேறுற கூடிக் கொல்லல, நிகரா-36
உடலொடு உலகுதுறததல், நிகரர்-29
உடலுதல், நிநதனை-61, நிகர 12
உடற்படுதல், உருக-50
உடுவின்கோமான, பொழி-40
உடைதல், உருக-112
உணஙகல்-குறைவு, ஊர-45, மெலிதல, திருவடி-48. உணஙகுறுதல-அழிதல, பிணி-138
உணரநோககுதல், நிநதனை-71
உணர்த்துதல், உருக-62
உணர்வினா, உருக-97
உணர்வு, நிந்த-79 [சூளா-1
உணர்வுகொளளுதல - எண்ணுதல்,
உணர்வுநாறுதல், சூளா-68
உதயமாலவரையின மீபபடாகதிர்ச செல்வர் × இராவணன் முடிக் கிரீடம, நிநதனை-8
உதவி, நிநதனை-71
உதறுதல-நடுககுதல், நிகரர்-28
உதிததுப்புலர்ந்த தோல்போலுருவத்தமரா, சம்பு-48 [பு-51
உதிரக்குமிழி விழியூடுமிழ்தல், சம
உதிரம, சூளா-4, அட்ச-43
உதைக்கபபுளகுதிததல், ஊர-110
உதைததல - செலுததுதல், பஞ்ச - 37. உதைப்பிததல், சமபு-44
உத்தமன, உருக-70 [று-40
உததரியம × அருவிததிரள்: கட
உநதி, உருக்-45
உநதுதல், கடறு-53
உபவனம, திருவடி-26
உமபர், வானுலகம் கடறு - 10, உருக் - 33
உமபாககொழுந்து - முடிசசிகரம், கடறு 51 [பஞ்ச-29
உமபாசசேணெடு மீயுயர் விசும்பு,
உமபி, நிந்தனை-57
உயஙகுதல், இலங-16
உயர்தலே, நிகரா-25
உயர்தல் - பரவுதல், நிந்தனை - 45, நிறைதல், தேனுயிர்தெரியல் - நிந்தனை-50
உயிராயிர முடையனுமெனச சோர்தொறுமுயிர்ததல், திருவடி - 29
உயிருணணல், பஞ்ச 51
உயிருணடல, பொழி-6 [தனை 66
உயிரெனவுரியோன்-கணவன், நிந்
உயிர், காட்சி 37. உருக 104
உயிர்களுடல்கள் × கணவரை நாடிச்செலலும அரககியர், அட்ச-45
உயிர்காலுதல - பெருமூசசு விடுதல், சூளா 63
உயிர்குடிததல், நிந்தனை-72
உயிர்கோள் - வதம, சூளா 49
உயிர்ககுஉறுதிகொள்தல், சூளா - 7
உயிர்ததல - பெறறெறடுததல, பெருமூசசுவிடுதல், உருக்-65, 66. நிகரா - 13 [வடி-71
உயிர்ப்பிறேடுசெனினருடுவார், திரு
உயிர்ப்பு-காற்று, ஊர-210
உயிர்ப்புறுதல், காட்-37 [40
உயிர்ப்பெனும் பெரும்புகை, பிணி -
உயிர்ப்பொடும் புகைதவழப் பாமபின வீககினன், பிணி-68

உள்ளமழுங்குதல், பஞ்ச-53
உள்ளமின்றி யுறங்குதல், ஊர-171
உறல், எருக 37
உறவாருந்துணை, கிங்கரா-24
உறவு, நிந்த-54
உறழ்தல், உருக்-3
உறு-மிகுதி, கடறு-14
உறுகண-துன்பம், காட்-76
உறுகோள-துன்பம், உருக்-56
உறுதல், ஊர - 136 நோதல, நிந்த-71. துன்பமடைதல், பாசப்-9
உறுப்பு-உறுதி, ஊர-37
உறை, கடறு-77. நிந்த-47
உறைதல் - வசித்தல், உருக - 104; மொய்த்தல், 76 [உருக-50
உறைத்தல் - பொருந்தி யிருத்தல்,
உறையிடுதல், ஊர-34; உருக-117
உறையுள, உருக-81
உன்மத்தம், உருக-84 [ஊர-151
உன்னம்-நீர்வாழ் பறவைப்பொது,
உன்னுதல்-விரும்புதல, உருக - 12· நினைத்தல, நிந்த-54
ஊக்கம்-உற்சாகம், ஊர-211
ஊக்குதல் - உற்சாகங் கொள்ளுதல், முயலுதல, ஊன்றுதல ஊர-221 பிரயோகித்தல்; பஞ்ச-33
ஊசிபோல்வதோர வடுச்செயா நெடும் புயம், பஞ்ச-17
ஊடடித்துடைதல், சமபு 40
ஊடல், கடறு-12 [அட்ச-1
ஊட்டரக்குண்டபோலுநயனத்தான்,
ஊதியம, பாசப-27
ஊதை, சூளா-59
ஊர்தல, பஞ்ச-43
ஊழி - பிரமனுயுள், உருக் - 110. ஊழித்தீ, நிந்த - 47. வாழ்நாள், பிணி-33
ஊழிக்கால், கடறு - 22. ஊழிக்கால ஒவ்வாதன ஒவ்வவீசும, கடறு-62
ஊழிக்காற்று × தேர, பாசப்-44
ஊழித்தீ, பஞ்ச-66
ஊழிநாயகன, ஊர-9
ஊழிபோகடல × உரவுத்தானை:
ஊழிபோவு, கிங்கரா-12 [அட்ச-7
ஊழியான், காட்-63, ஊர-229
ஊழியிறுதிக்கதிரோன் × அனுமான்: அட்ச-27

ஊழியோர் பகலாயோதும யாண்டெலாம, உருக-72
ஊழிவீழுருமு × அனுமன் பிணி - 139. ஊழிவெங்கால் × அனுமான், கடறு-62
ஊழ்-யுகாந்தகாலம், கடறு-4, விதி, கடறு - 21 வரிசை, கடறு - 64: முறை, சமபு-16
ஊழ்முறையலலதுவலியதொன்றில், ஊர-205 [அட்ச-38
ஊறலரிசி × அட்சனது செறிதசை:
ஊறியநறவு, கடறு-12
ஊறு-துன்பம், உருக-80, பாசப்-47, பிணி-53 குற்றம், கடறு-58, 88
ஊறுதல, உருக-52
ஊற்றம், நிந்த-57
ஊனம-பாவம, பொழி 23
ஊனாபறவை, அட்ச-40
ஊன்றுதல்-உள்ளத்துக கொள்ளுதல், ஊர-92
எகா, பஞ்ச-48
எஞ்சுதல-குறைதல், நிந்த-48, உருக்-2, கிங்கரா 54, அழிதல, நிந்தனை-48, மிச்சமாகவிடுதல, அட்ச-23, பின்வாங்குதல், பஞ்ச-60
எடுக்குறுதல-பிரதிஞ்ஞை செய்தல, கடறு-23
எடுத்தல-காத்தல், சூளா-51
எட்ட நிற்றல - ஈணடுமாறு அளாவி நிறறல, ஊர-24
எண-அறிவு, உருக-90, மதிப்பு 98
எணகொளளுதல் - கணக்கிடுதல், பொழி-50
எணடிசைததேவா, கிங்கரா-59
எணடிசையானை, கடறு-23
எண்ணுதல, நிந்தனை-78
எணவகையுரு, ஊர 12
எதிரெதிரகிடைத்தல, நிந்தனை-61
எதிர்தல, உருக் 58
எதிரமாற்றம, ஊர-84
எநதிரததேரா, அட்ச-10
எபபரிசு, பொழி-2
எமபியோ தேயந்தானெனநதைபுகழனறோ தேயந்தது, பாசப-5
எமபிவீதத விடுகணை, பாசப்-19
எம்முன். அட்ச 4
எயில, பொழி-2, ஊர-159

கண்டகர், சூளா - 53: கண்டகன், ஊர்-223
கண்டம்-துண்டம், பிணி-6
கண்டவாறு-செய்யும்வகை, ஊர்-16
கண்ணடி, கடறு-91
கணணன்-கருநிறமுடையவன்; கண போன்றவன்; கணணோட்டமுள்ள வன்; சூளா-72
கண்ணிணைசான்ற, நிந்-22
கணணிய கருமமின்றே முடிக்கு வென, அட்ச-19
கண்ணிற் கணட பாசமெல்லாமிட்டுக் கட்டுதல், பிணி-120
கண்ணீரினு னனைந்து யாக்கை வெப்பினுற் புலாந்த துகிலாள், காட்-8
கண்ணுத லொழியச செல்லுங கயிலையஙகிரி × இலஙகை நோக்கிச செல்லும் அனுமனை; கடறு-25
கண்ணுதல்மழு ,பஞ்ச-46
கணமணி, சூளா-88, கிஙகரர் - 32, பஞ்ச-13
கணமுகிழ்த்தல், பாசப்-59
கணவழுககுறுதல், ஊா-21
கதம், ஊா - 83, சம்பு - 37, திருவடி-16
கதலி கயிறுமண்ணுற வாலோடு வானத்துசசெலலுதல் × அரககியின் குடல் பூமிவரைபொருநத அனுமான் வாலொடு வானத தெழுதல்: கடறு 84
கதி-விரைவு, பஞ்ச-56
கதிததல் - வேகங கொள்ளல், பஞ் 55
கதிரெழுந்தனைய திருமுகம், அட்ச-43
கதிா, உருக்-29, பொழி-15, 37
கதிாவேந்தன் மின்மினி, ஊா-98
கதுபபு, காட்சி-9, பஞ்ச-13
கதுமெனை, திருவடி-23, பஞ்-5,
கதுவல், கிஙகரர்-48, இலங - 33, நுழைதல், நிந்தனை-38
கந்தர்பப நகரமெஙகணுந் தெரியும, காட் 45 [106
கந்தர்ப்பமகளிராடு நாடகம், ஊர்-
கந்தாரம்-கந்தாரப்பண்; கடறு 74, ஊர்-80

கபாடம், ஊா-162
கப்பணம், கிஙகரா-33
கமலக்கணணனு ருள்ளுறை யுயிர், காட்-66
கமலத்தணணல் சாபமொழி, திருவடி-65
கமலம், உருக-51
கமழ்தல்- வாசனை வீசுதல், உருக்-57
கமை-பொறுமை, ஊா-76, காட்-10
கம-ஆகாசம், பொழி-32
கமபா திருமண்காப்புத் தரிக்கும் வைணவா, சம்பு-21
கம்மியர்கள், ஊர்-158
கய, கிஙகரர்-7
கயககமிறுயிறசி, ஊர்-121
கயத்தொழில-இழிதொழில், உருக்-82
கயிலைமலை, கிஙகரர்-20 [85
கயிலையிற் றுலைவி லோன், கடறு-
கயிலையையெடுத்த வரலாறு, கடறு-11
கயிறலைப்புண்ட வனுமன்றோள் × முயிறலைதெழுமுதுமரம்,பிணி-8
கயிறுகளாற் கட்டினதற்கு அனு-மான் மகிழ்தல், பிணி-121
கரணம-அந்தககரணம், ஊா-118
கரநதுறை, ஊா-145
கரம-கை, உருக-44, 109 நிந்த-63: காநதி, அட்ச-15
கரமபற்றுதல், சூளா-34
கரனாபாடு, பாசப்-19
கரன, உருக-55
கரன்பிசைந்தெழுதல், ஊா-221
கரி-யானை, உருக-44, சூளா-61
கரித்தல - கரியாக்குதல், எரித்தல்; ஊர்-44
கரி . நாயணிமுகத்தினர், காட்-59
கரியநாழிகை-இரவு, ஊா-157
கரு-நடுவிடம், ஊா-232· கிஙக-44
கருட னமுதஙகொணட கதை, கடறு 21, 42, கிஙகரா-48
கருத்தியல்புரைக்குஙகணை, ஊா-107
கருத்து எண்ணம், உருக-22
கருநிறமுள்ள கழற்கற்றையின்கீழ் விளஙகும் நெற்றி × இருளின் கீழ் விளஙகும மதி, உருக-56
கருப்புரம, நிந்தனை-2

காலுதல், சூளா-63· நிந்த-75, கால்-
துாண்: ஊா - 125, பொழி - 50
காற்று, உருக - 31, சூளா - 61,
சம்பு-45, சககரம், அட்ச-33
கால்கொளளுதல் = கால்வைததல, பொழி-50
கால்விடுதல்-ஓடுதல்: அட்ச-39
காவலன், பொழி-56
காவற்சேனையையனுமன் காணல், ஊா-71 [ஊா-73
காவற் பெருஙகடல் கடப்பரிது,
காவறறேவா களிககுரு சிந்தையார முதல், அட்ச-50
காவியஙகணணி, ஊர்-213
காற்றிற்கடியகலினப்புரவி, சம்பு-42
காற்றினுல் மேருமலையின் மூன்று சிகரஙகளிடிந்த கதை, கடறு-23
காற்றுககுள்ள மூவகைக்கதி, ஊா-124 [103
கானகமயில் × அரககமாதா: ஊா-
கானகம், உருக-58
கானிமிர்வெஞ்சிலை, பஞ்ச-60
கானுயாத்ததாா, ஊா-201
கானெதிர்ந்தது, காட்-18
கான் = காடு, உருக்-7, நிநதனை-50 கிஙகரர்-4
கான்முதல், நிநதனை-3
கான்முளை, பிணி-91
கிஙகரா, பாசப்-10 பிணி-12
கிஙகரா எவ்வாறு தோற்றனரென இராவணன விஞவல், கிஙக-57
கிசசு = கருமாறு' நெருப்பு, பிணி-3
கிடஙகு, ஊா-147
கிடை-படுத்திருககை, ஊா-127
கிணகிணிப்பதுமம், ஊர்-4
கிரகணம், பாசப்-58
கிலுக்கம், ஊா-151
கிழக்கெழுவழககு, கடறு 28
கிளாத்தல், நிநதனை-61: உருக-62
கிளிகட்குமகளிா மொழிகற்பிததல,
கிளை-நரமபு, நிநதனை-11 [ஊா 6
கிளைஞர், சூளா-38
கிளைா, உருக-62
கின்னரமிதுனம், ஊா-119
கின்னரம் - நீாவாழ்பறவை வகை, ஊா-151
கின்னரர், கடறு-73

கீட்டிசை, கடறு-39
கீதங்கள, கடறு-73
கீழைநாள்-விடியற்காலம, காட்-42
கீழ்ததிசைப்பெண, ஊா-53
கீழ்திசையானை-ஐராவதம இலங-8
கீழ்மையான், சூளா-20
கீழ்விழுதல்-கீழிறஙகுதல், ஊா-149
கீளுதல், கடறு-20
குகைப்புறத்துப் புரணடுபோகும நாகஙகள் × மலையின வயிறுகிழ்ந்த குடர்களபோலும, கடறு-3
குசை, பஞ்ச-38
குசசரித்திறத்தின், ஊா-189
குஞ்சரத்தனகொழுநா, இலங-27
குஞ்சியிலுங கூந்தலிலுங தீகொளுந் தியமையும கொளுநதாமையுமறியாமை, இலங-5
குடா, சூளா-44, நிநதனை-76
குடிமிக்குன்றம, உருக-82. திருவடி-1
குடைதல்-அரிததல, சலககிரீடை செய்தல். உருக-23, சூளா-53
குட்டிமம், பொழி-24 [151
குணலம்-ஓாநீாவாழ்ப்பறவை, ஊா-
குணித்தல், கடறு-35
குணிப்பு-அளவு, பிணி-23
குணில்-குறுநதடி, நிநதனை-13
குணடஙகுளிதல், பிணி-130
குண்டலமுககதியா, பிணி-6
குதலை, உருக-70. நிந்தனை-69
குதலைதளளுதல், உருக்-70
குதறுதல்-கலஙகப்பெறுதல், பொழி-42
குதிரைசசேனை மிகுதி, ஊா-9
குப்புறுதல்-கடததல், கடறு-14
குமுறுதல, கிஙகரா-6
குமை-நெருக்கம், காட்-10
குமபகர்ணனுயிாப்பு × ஊழியின் வரவுபார்த அழல்வதான உலகெலாந் துடைககும மாருதம, ஊா - 127: கும்பகாணனுயிாபபு அனுமனை நிறுவி நாசியினளவை யினடததல் - 126· கும்பகாண னுறககமெய்தல × நாகம தடை மநதிரததாற் றகை யுறுதல், கடையுகமுடிவுபாாததுக கடல புடைபெயரா திருத்தல் - 129: கும்பகர்ண னெயிற்றின் வரு

